21st March 1961]

பொழுது கனம் அமைச்சர் அவர்கள் மலேரியா கொசுவைத்தான் ஒழிக்கிறார்கள், மற்ற கொசுவை ஒழிப்பதில்லை என்று குறிப்பிட்டார்கள். அதன் விவரம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Though the statement may read like that, the inference is that the concentration is to eradicate the malaria bearing mosquitos and not other kinds of mosquitos by technical name.

SRI T. KARIA GOUNDER : கொசுக் கடியினால் மலேரியா வருவதாக முடிவு இருக்கும்பொழுது, கொசுவை நீக்கும்பொழுது மூட்டைப் பூச்சி வந்திருப்பதால், அதனுடைய உபத்திரவத்தால் ஏதாவது வியாதி உண்டாகிறதா என்று சர்க்கார் பரிசீலனை செய்தார்களா ? அப்படியிருந்தால் அதன் விவரத்தை அறிவிக்க முடியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அதனால் வியாதி ஒன்றும் இல்லை. அசௌகரியம்தான். அந்த அசௌகரியத்தினால் தான் அதைப் பற்றி இங்கே கேள்வி எழுப்பக் கூடிய நிலைமை ஏற்பட்டது.

SRI S. NAGARAJA MONIGAR : இந்த "டி. டி. டி" அடித்தால் அழிந்து, ஒழிந்து போகாமல் அதிகமாக உற்பத்தி ஆவதற்கு கொசுக்கள் முன் வருமானால், அவைகள் இந்திய வை-பாரதத்தை மதிக்காமல், இந்திய அரசியல் சட்டத்திற்கு உட்படமாட்டேன் என்று சொல்கிற கொசுக்களா ?

(பதில் இல்லை.)

*Nurses and midwives (Relief)*

*974 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்திலுள்ள ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் நர்ஸ்கள், மிட்வைப்புகள் அடிக்கடி காயலாவாகி விடுகிறார்கள் என்பது உண்மையா ?

(இ) இதற்குக் காரணமென்ன ?

(உ) அதற்கான பரிகாரம் காண சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) No, Sir,

(இ) Does not arise.

(உ) Periodical medical check up is being done in every 6 months.

SRI V. K. KOTHANDARAMAN : நமது ஆஸ்பத்திரிகளில் நர்சுகள் மிகவும் குறைவாக இருப்பதன் காரணமாகவும், அவர்களுக்கு இருக்கிற வேலைப் பளுவின் காரணமாகவும், மாதத்தில் ஒன்றிரண்டு நாட்கள் தான் விடுமுறை கிடைக்கிறது என்ற காரணமாகவும் அவர்கள் அடிக்கடி நோயால் பாதிக்கப் படுகிறார்கள் என்பது கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ? ஆகவே, அவர்களுக்கு வாரத்திற்கு ஒரு நாளாவது விடுமுறை கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir. It is now being done in all the hospitals in the City and in some hospitals in the mufassal also.